செய்யுளுக்கு எவ்வித சமயக் கடவுளையும் குறிப்பிடாமல் உரை வரைந்தது போல் இந்த இடத்திலும் அவ்வித உரையையே அவர் எழுதியிருக்க வேண்டும். கண் = இடம் எனப் பொருளாகும் எனக் கூறி முடித்தனர். அதாவது 'அன்பர்களின் இருதயமாகிய தாமரை மலரினிடத்தில் எழுந்தருளி யிருப்பவனாகிய கடவுள் உலகம்' எனப் பொதுவாகவே இங்கும் பொருள் கொள்ளுதல் பொருந்தும் எனக் கூறி முடித்தனர்.

இந்நூல் அச்சுப்பிழையின்றி வெளிவரப் பேருதவி புரிந்த உயர்திருவாளர் அம்பை - இரா. சங்கரனார் அவர்கட்கும், பிழைதிருத்தம் பார்த்து உதவிய சைவ சித்தாந்தப் பேரறிஞர் ந. ரா. முருகவேள் அவர்கட்கும், இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த முருகன் அச்சக உரிமையாளர் மு. நாராயணசாமி முதலியார் அவர்கட்கும் எனது மனமார்ந்த நன்றி உரியதாக.

இங்ஙனம்

சென்னை
30—10—67.

பாம்பன் அடிகளாரின் சீடர்களில் ஒருவன்
''தமாரசிவம்'' எனப்பெயரிய
தா. வேங்கடாசல முதலியார்.